# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:103 -*பங்குனி*-18--தி.பி.2056 ஏப்பிரல்—1--- பொ.ஆ.2025*

**நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்**


சிலம்பொலி செல்லப்பனார்

(22 திசம்பர் 1929 - 06 ஏப்பிரல் 2019)

நினைவிதழ்

## தமிழின் நடம் செல்லப்பர்

இ.சுந்தரமூர்த்தி

சிலம்பை ஒலிக்க வைத்த செம்மல்
செல்லப்பனாரின் சிலம்பொலி
இன்னும் கேட்கும்

சிலம்பு தோறும் நின்ற தையல் என்பர்
நம் செந்தமிழ்த் தாயை
சிலம்பு செல்லப்பரும் சிலம்பம் தொறும் நின்றவர்தாம்

பெருங்கதை ஆய்ந்த இருநிலா சொல்லாய்வர்
பெற்ற மகளுக்கு வைத்த பெயரோ
கொங்கு வேள்
பல் காப்பியம் ஆய்ந்த பல்துறைப் பெரும்புலவர்
செல்லப்பனாரின் செல்வமகன்
தொல்காப்பியன்

கண்ணகியைக் காலம் தோறும் எடுத்துரைத்த
சிலம்பொலியாரின் செல்வமகள்
மணிமேகலை

பாரதிதாசனின் பைந்தமிழ்ப் பாவரங்கம் பலவும்
பாவலர் சிலம்பொலியாரின் குடும்பவிளக்கு
நுகர்ந்து
பெற்ற செல்வங்கட்கும் பெயர்வைத்த பண்பிலும்
உற்ற தமிழ்ச் செல்வராய் விளங்குவோர் நம்
செல்லப்பர்.

தமிழ் செய்யும் நடங்களின் தலையாய் வாழ்ந்த
வாழ்ந்த செல்லப்பரின் நடம் பதிந்து நாளும்
தடமாய் வாழ்வோம்.




*6/4/2019 அன்று நம்மைப் பிரிந்துசென்ற சிலம்பொலி செல்லப்பனார்க்கு 14//4/19அன்று நிகழ்ந்தபுகழ்வணக்கம். கவிஞர் மு.மேத்தா மலர்தூவி வணங்குகிறார்.படத்தின் இடமும் வலமும் நிகழ்ச்சியை அமைத்து அன்பர்களை ஒருங்கிணைத்த மறைமலை இலக்குவனார் & பாவலர் இளவரச அமிழ்தனார்*

<<<<<< சிலம்பொலியார் புகழ்வணக்கத்திற்கு அறிஞர் இ.சுந்தரமூர்த்தி அனுப்பிய இரங்கலுரை



# தமிழுக்கேது மரணம்?

ஈரோடு தமிழன்பன்

இலக்கியத்தில்
இனி மாரிக்காலம் இல்லை
மேடைகள் விழாக்கள்
கருப்புடை தரித்தன
கண்ணீர் விட்டன.

இன்குலாப் என்னும்
சுடுசூரியன் ஒருநாள் விழுந்தான்
அப்துல்ரகுமான் என்னும்
கவிதைப் பவுர்ணமி ஒருநாள்
விழுந்தான்
தமிழ் மண்
தாங்க முடியாமல் தவித்தது...
இன்று
சிலம்பொலி விழுந்தார்
வானமே
விழுந்துவிட்டது.

யார் எமைத் தூக்கி நிறுத்துவார்?
நூறு காவிய
அடர் வனங்கள் தீப்பற்றி
எரிகின்றன
ஐயனே!
சிலம்பொலியே! எங்கே
போனீர்கள்?

உமக்குள்
எமக்கான வள்ளுவர் இருந்தார்
இளங்கோ அடிகள் இருந்தார்
பாரதிதாசன் இருந்தார்
உம்
ஒற்றை மரணத்தில்
ஓராயிரம் இழப்புகள்!

குற்றாலம்
வற்றியபோது
உன்னிடம்தானே தண்ணீர்
யாசகம் கேட்டது!

குன்றூர்க்குக்
குளிர் அதிகமெனில்
உன்னிடம்தானே
வெப்ப ஒப்பந்தம் போட்டது.

ஆயிரம் பல்லாயிரம்
தமிழ்க் கவிதைகளுக்கு
உன் மூளைதானே பாது
காப்புப் பெட்டகம்!

உமக்குள்
ஒரு புலவன் இருந்தான்
ஒரு புரவலனும் இருந்தான்
ஒருசேர இருவரும்
புறப்பட்டுப் போனது எங்கே?

மாதங்களை
ஆண்டுகள் அடித்துத் தின்னுமோ?
மரணத்திற்கென்ன
அப்படிப் பாழான பசி?
உன்னை வாரிக் கொண்டுபோக?

மூப்பு,
காரணமா?
தமிழ்தானே உன்னிடம்
மூத்திருந்தது
தமிழுக்கேது மரணம்?

காலத்திற்கு
நாட்குறிப்பெழுதும்
பழக்கம் இருப்பின்
இன்றைய நாளைத்
தான்
இறந்த நாளாகத்தான்
எழுதி வைக்கும்.

தானாய்ச் சேர்ந்த கூட்டம்:

# இலக்கியச் சுற்றத்தினரின் உணர்வார்ந்த நினைவேந்தல்




ஏப்பிரல் ஆறாம் நாள் இடியாக விழுந்த துயரச் செய்தி சிலம்பொலியாரின் மறைவு;அனைவரும் புகழ்வணக்கம் செலுத்தக் குழுமியபின் எழுந்த ஒரு கேள்வி.அனைத்துப் பாவலர்களும் ஒருங்கிணைந்து செல்லப்பனார்க்குப் புகழ்வணக்கம் செலுத்தும் வகையில் உடனடியாக ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யவேண்டுமே?எங்கே?எப்படி?பாவலர் இளவரச அமிழ்தனாரும் நானும் உடனே களத்தில் இறங்கினோம். அங்கும் இங்கும் அலைந்தும் தொலைபேசியில் உசாவியும் இடம் கிடைக்கவில்லை. ஒய்.எம்.சி.ஏ.வில் ஏதோ புத்தக வெளியீட்டு நிகழ்ச்சியாம்.அதனை ஒத்திவைக்க இயலாது எனக் கைவிரித்துவிட்டனர்.அந்தத் துயர் நிறைந்த சூழலில் உணவகங்களில் நடத்த மனம் ஒப்பவில்லை.

என்னுடன் அலைந்துவந்த இளவரச அமிழ்தனார் உறுதிவாய்ந்த குரலில் கூறினார்:"ஐயா!இருவரும் அலைவதால் நேரம் வீணாகும்.நீங்கள் ஏதோ ஓர் இடத்தைப் பிடியுங்கள்.நான் அழைப்பு அடித்துப் பரப்புரைக்கு ஏற்பாடு செய்கிறேன்.வருபவர்களை வரவேற்பதும் என் பொறுப்பு."இங்ஙனம் பொறுப்பைப் பகிர்வு செய்தல் விரைவான நடவடிக்கைகளுக்கு வழிவகுக்கும்.ஒருவழியாகக் கவிக்கோ அரங்கை அணுகி 14/4/19 அன்று இடம் பிடித்து முழுமையான கட்டணத்தைச் செலுத்தி அமிழ்தனுக்குத் தொலைபேசிவிட்டேன்.அமிழ்தனார் சொன்னது போன்றே உடனே அழைப்பு அச்சடித்து அஞ்சலில் அனுப்பும் பணியை நிறைவாகச் செய்துவிட்டார்.அஞ்சலில் அனுப்பியதைவிடப் புலனவழி(வாட்சு அப்) தகவலே பலர் கவனத்தை ஈர்த்தது.எங்களால் தகவலே தெரிவிக்கப்படாத சூழலிலும் கவிஞர் மு.மேத்தா,முனைவர் வாசுகி கண்ணப்பன்,பேராசிரியர் பெரு.மதியழகன் போன்ற பெருமக்கள் வந்தது ஓர் ஆறுதலாக அமைந்தது.எவ்வளவு நான் மறுத்தபோதும் அரங்கவாடகைக்குத் தங்கள் பங்காகப் பெற்றுக்கொள்ளுமாறு தொகையைக் கைகளில் திணித்த வாசுகி கண்ணப்பனார்,பெரு.மதியழகனார் தமது கடப்பாட்டைப் புலப்படுத்தும் முனைப்பைக் காட்டினார்கள்.''உடனடியாக நடத்தப்படும் இந்தப் புகழ்வணக்கம் செல்லப்பனார்க்கு நாம் காட்டும் உண்மையான மரியாதை''என்று அவர்கள் கூறிய ஈரம் நிறைந்த சொற்கள் இன்னும் என் செவிகளில் பசுமையாக ஒலிக்கிறது.தமது புகழ்வணக்கத்தைத் தொடங்கிய மு.மேத்தா அவர்கள்"இது தானாய்ச் சேர்ந்த கூட்டம்:நன்றியுணர்வாளர்களின் ஈட்டம்"என முதலில் குறிப்பிட்டார்.நாம் நம் குடும்பப்பெரியவர்களுக்கு நடத்தும் நீத்தார் நினைவைப் போலவே அமைந்த இந்த நிகழ்ச்சிக்கு முத்தாய்ப்பாக அமைந்த நெகிழ்ச்சிமிக்க செயல்,இளவரச அமிழ்தனாரும் அவர் துணைவியார்.லீலாவதி அவர்களும் வந்திருந்தோர் அனைவர்க்கும் வடையும் தேனீரும் சுடச்சுட வழங்கிய காட்சி ஆகும். செல்லப்பனார் ஒவ்வொரு தமிழ்க்குடும்பமும் போற்றும் பெரியவர் என்பதற்கு இந்த நிகழ்ச்சி அறுதிமிக்க சான்றாய் அமைந்தது.யார் யாருக்கு ஆறுதல் கூறுவது? இந்தக் குழப்பமான துயர்நிகழ்வில்

அனைவருமே  ஒருவர்க்கொருவர் ஆறுதல் கூறிக்கொள்வதைப் போன்றே இந் நிகழ்ச்சியும் இதனால் விளைந்த  நெகிழ்ச்சியும் அமைந்தன.

ஆறு ஆண்டுகள் மறைந்தபின்னரும் இந்த  உணர்வுகளின் தாக்கமும் அழுத்தமும் நெஞ்சைக் கனக்கவைக்கின்றன;உறவாய்க் கூடுதற்குக் குடும்ப அமைப்பைப் போன்றே இலக்கியச்சுற்றமும் தகவுமிக்க பின்புலம் என்பதை உலகுக்கு உணர்த்த உதவுகின்றன.

**"சிலம்பொலி சு.செல்லப்பனார் போற்றுதும்"**
**இலக்கிய அமைப்புகள் இணைந்து நடத்தும்**
**பாவலர்களின் புகழ் வணக்கம்**

தோற்றம்: 24.9.1928



மறைவு: 06.04.2019

நாள்:14.04.2019 ஞாயிறு மாலை 5 மணி

இடம்: கவிக்கோ மன்றம்

எண்: 6, இரண்டாவது முதன்மைச் சாலை,சி.ஐடி.காலனி

(நகர் மேம்பாட்டு அறக்கட்டளை குடியிருப்பு)

மயிலாப்பூர்,சென்னை-4

பாமலர்கள் குவித்திடவே பாவலர்கள் அணிதிரள்க

சிலம்பொலியார் புகழ் போற்றத் தமிழன்பர்கள் வருக

பேராசிரியர் மறைமலை இலக்குவனார் (9791861682) – சிலம்புநம்பி இளவரச அமிழ்தன் (9841084941)

ஒருங்கிணைப்பாளர்கள்

# கொல்லிமலைச் சுற்றுலா

பாவேந்தரின் மல்லைச் சிற்றுலா போன்று இலக்கியப் புகழ்பெற்றது, சிலம்பொலி செல்லப்பனார் தலைமையில் புலவர்கள் அணிவகுத்த கொல்லிமலைச் சுற்றுலா.இதனை அமைத்த புரவலர் கவிஞர் இளவரச அமிழ்தனார். இதனைப் பற்றி அப்போதே முகநூலில் பதிவுசெய்திருந்தேன்.இச் சுற்றுலாவில் பங்குபெற்ற முத்துச்செல்வனார் அவர்களையும் கொண்ட குழுப்படத்தை அவர்



இடமிருந்து வலம்: மறைமலை இலக்குவனார்,முத்துச்செல்வன் அவர்கள்,பொறியாளர் சுந்தர்,சிலம்பொலி செல்லப்பனார்,மணிமேகலை செல்லப்பன்,முனைவர் இ.சு.,சுற்றுலா அமைப்பாளர் இளவரச அமிழ்தன்,புலவர் வே.பதுமனார், புலவர்மணிஇளங்குமரனார், பாலசீனிவாசன்,கவிக்கோ ஞானச்செல்வன்



பாரதி தாசனைப் பாரெங்கும் முழக்கிப்
பைந்தமிழ்த் தேர்க்குப் பாகனாய் விளங்கும்
செந்தமிழ்க் கொண்டல்; தண்டமிழ்த் தென்றல்,
ஆயிர மாயிரம் புத்தகங் கற்று
நூல்நயம் ஆய்ந்து அணிந்துரை வழங்கிடும்
நூலறி புலவர்; தமிழ்நெறிச் செல்வர்;
வள்ளுவம் போற்றிடும் வாய்மை நெறியினர்;
வாழிய! வாழிய! வண்டமிழ் போன்றே!

19/12/2009 அன்று நடைபெற்ற இலக்குவனார் நூற்றாண்டு விழாவில் சிலம்பொலியார்க்கு

"இலக்குவனார் விருது"

திராவிடர் கழகத் தலைவர் வீரமணியார் வழங்குகிறார்.

சிலம்பொலியார் குடும்பம் ஒரு

பல்கலைக்கழகம்



சிலம்பொலியாரின் 'சிலம்பொலி"என்னும் ஆய்வுநூலுக்குக்

## கலைஞர் வழங்கிய அணிந்துரை:



நண்பர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் எழுதிய 'சிலம்பொலி'என்னும் நூலைப் படித்துப் பார்த்தேன்.இந்நூலின் தொடக்கமே தொன்மையான தமிழ் நாடக இலக்கணத்தை நாட்டு மக்களுக்கு நினைவூட்டும் தன்மையில் அமைந்துள்ளது பாராட்டுக்குரியது.மங்கல நிகழ்ச்சி நடைபெறும்போது மற்றவைகளைக்-குறிப்பாக-எதிர்மறையானவைகளை-ஏசல்களைப்-பேசாமல் இருத்தல் நல்லது.எச்செயலைச் செய்கின்றபோதும் நல்லாட்சி செய்யும் நாடாள்பவரை எண்ணி வாழ்த்துவது பழந்தமிழர் பண்பாடு என்பதனை நண்பர் செல்லப்பன் நல்ல முறையில் எடுத்துக்காட்டியுள்ளார்.இன்று தேவையான இக்கருத்துகள் தமிழர் பண்பாட்டை நிலைநிறுத்த உதவும் என்று நம்புகிறேன்.

இமயம்,பொதியம்,புகார் இவை மூன்றும் அழியாது எனச்சொல்லிய இளங்கோவடிகளின் வாக்குப் பொய்க்காது என்பதை வலியுறுத்த எண்ணிய ஆசிரியர்,அந்த எண்ணத்திற்கு எடுத்துக்காட்டாகத் தமிழக அரசு புதுப்பித்துள்ள பூம்புகாரைச் சுட்டிக்காட்டுகிறார்.

என்றோ பாடிய தமிழ்க் கவிஞனின் வாக்குக்கு இன்றைய தமிழக அரசின் சாதனையைச் சாட்சியாகக் காட்டுவது தமிழர்களுக்கெல்லாம் இன உணர்வைத் தூண்டும் என்பதில் ஐயமில்லை.இது மட்டுமா?தமிழரின் அன்றைய அணிகலன்கள்,ஆடையின் தன்மை,அங்காடிகள், நகரமைப்பு, மன்றங்களின் தன்மை,கோயில்கள்,கொற்றவைக்கு அக்காலத்தில் செய்த ஒப்பனை,தமிழர் பண்பாடு-இப்படிப் பற்பல பண்டைத்தமிழகத்தின் செய்திகளை ஆசிரியர் அழகுறத் தீட்டியுள்ளார் இந்நூலில்!

தமிழகமெங்கும் சுற்றிச் சுழன்று சிலப்பதிகாரத்தின் மாண்பினையும் செந்தமிழின் மேன்மையினையும் திறம்படப் பல மேடைகளில் முழங்கிவரும்-சீரிய செயல் புரியும் இவர்,இளங்கோவடிகளின் செந்தமிழ்க்காப்பியத்துள் மூழ்கித்திளைத்து,முத்துக்குளித்து,நல்ல சிப்பிகளை மேலே கொணர்ந்து,அரிய பல நன்முத்துகளைத் தேர்ந்து,திகட்டாத இனிய கருத்தோவியமாக இந்நூலைப் படைத்துள்ளார்.



செந்தமிழர் நலம் பாடும் பைந்தமிழ்க் கருவூலமாம் சிலப்பதிகரத்தை எந்தக்கோணத்தினின்று ஆராய்ந்தாலும்,நம் சிந்தை அணு ஒவ்வொன்றும் சிலிர்க்கவைக்கும்.தமிழரின் முறையான வரலாற்றுச் செல்வமாய் மூவேந்தராண்ட முப்பெரும் நாடுகளின் வளங்காட்டும் செழும்படைப்பாய்,வாழ்வுநெறிகளை வரையறுத்து உரைத்திடும் நீதிவிளக்காய் சுற்றுலாப் பெருமை நவின்றிடும் சுவை குன்றாச் சுவடியாய்,மொழிச் சிறப்பும் இனநலனும் மேம்படுத்தும் தீஞ்சுவை அமுதமாய் இலங்கிடும் சிலப்பதிகாரத்தில் நானும் தோய்ந்து மனத்தைப் பறிகொடுத்தவனாதலால் இதனை நன்கு சுவைத்திட முடிகிறது.

புதையுண்ட பூம்புகாருக்குப் புத்துயிரூட்டி வரும் உணர்ச்சி பொங்கிப் பூரித்துப்

புதுப் பிரவாகமாய் ஓங்கிவரும் இந்த எழுச்சிக் காலத்தில்,ஏற்றதொரு நூலினைப் படைத்தளிக்கும் இனிய நண்பர் செல்லப்பனைப் பாராட்டி அவர்தம் முயற்சிகள் வெல்க என வாழ்த்துகிறேன்.

**பத்துப்பாட்டு நூல்களைப் பற்றி இவர் ஆற்றிய பொழிவுகள்**

"சங்க இலக்கியத்தேன்" என்னும் தலைப்பில் நூல் வடிவம் பெற்றுள்ளன.இவர் பத்துப்பாட்டு நூல்களைப் பற்றிப் பேசிய நாள்களும் அக்கூட்டங்களுக்குத் தலைமை தாங்கியவர்களும்:

| நாள்: | நூல்: | கூட்டத்தலைவர் |
|---|---|---|
| 6-1-1990 | திருமுருகாற்றுப்படை | முனைவர் அகஸ்டின் செல்லப்பா |
| 20-1-1990 | பொருநராற்றுப்படை | கவியரசர் பொன்னிவளவன் |
| 3-2-1990 | சிறுபாணாற்றுப்படை | முனைவர் தி.சாம்பமூர்த்தி |
| 3-3-1990 | முல்லைப்பாட்டு | பெரும்புலவர் க.பழனி பாலசுந்தரனார் |
| 17-3-1990 | மதுரைக்காஞ்சி | திரு. அரு.சங்கர் |
| 7-4-1990 | நெடுநல்வாடை | திரு.முகம் மாமணி |
| 21-4-1990 | குறிஞ்சிப்பாட்டு | திரு.சு.இலம்போதரன் |

5-5-1990 மலைபடுகடாம் கவிஞர்.இளஞ்சேரல்

16-6-1990 பெரும்பாணாற்றுப்படை திரு.க.முனிராசன் எம்.ஏ. எம்.எட்.

இப்பொழிவுகள் அன்றில் பதிப்பகத்தாரால் நூல்வடிவம் பெற்றன.

மூன்று மடலங்கள்(Volumes)கொண்ட தொகுப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது.

மடலம்1.திருமுருகாற்றுப்படை,பொருநராற்றுப்படை,சிறுபாணாற்றுப்படை,பெரும்பாணாற்றுப்படை

மடலம்-2.முல்லைப்பாட்டு,மதுரைக்காஞ்சி,நெடுநல்வாடை

மடலம்-3.குறிஞ்சிப்பாட்டு,பட்டினப்பாலை,மலைபடுகடாம்



இந்நூலுக்குக் கலைஞர் மு.கருணாநிதி அவர்கள் வாழ்த்துரையும் பேராசிரியர் க.அன்பழகன் அவர்கள் அணிந்துரையும் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

'செல்லப்பன் போன்றவர்கள் தங்கள் முழு நேரத்தையும் இலக்கியப்பணிகளுக்காகவே செலுத்திவருவதால் இதுபோல் மேலும் பல நல்லநூல்கள் சங்க இலக்கியங்கள் பற்றி வெளிவந்திட தேவையான முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்."- கலைஞர் மு.கருணாநிதி

"இவ்விரிவுரை ஒவ்வொன்றும் கொற்கைவெண்முத்துக்களைத் தங்கத் தாம்பாளத்தில் கொட்டி வைத்துப் பரிசளித்தது போன்றும் இனிய மாதுளையின் செந்நிற மணிகளை வெள்ளித்தட்டில் நிரப்பி உண்ணத்தந்தது போன்றும் உளம் மகிழ்வளித்தது."

-------பேராசிரியர் க.அன்பழகனார்

சிலம்பொலியாரின் “நல்ல குறுந்தொகையில் நானிலம்” என்னும் நூல் பாரதி பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டது.(மு.ப.1959)

நிலவகை என்னும் முதல் இயலில் தமிழ் அக இலக்கணம் கூறும் நானில வகைப்பாட்டை விளக்குகிறார்.(ப.5-11)இரண்டாம் இயல் குறிஞ்சி என்னும் தலைப்பில் அமைந்து குறுந்தொகை நூலில் இடம்பெற்றுள்ள குறிஞ்சித்திணைப்பாடல்களின் உவமைநயத்தை விளக்குகிறது.(ப.12-50)மூன்றாம் இயல் பாலை என்னும் தலைப்பில் அமைந்து குறுந்தொகை பாலை நிலம் குறித்து வழங்கும் வண்ணனைகளையும் உவமைநயத்தையும் எடுத்துரைக்கிறது.(ப.51-76)நான்காம் இயல் முல்லை என்னும் தலைப்பில் அமைந்து குறுந்தொகை வழங்கும் முல்லைநில வண்ணனைகளைத் தொகுத்துரைக்கிறது.(ப.76-90)ஐந்தாம் இயல் மருதநில வண்ணனைகளைக் குறுந்தொகை வழங்குமாற்றை விவரிக்கிறது.(ப.90-104)ஆறாம் இயல் நெய்தல் என்னும் தலைப்பில் குறுந்தொகை காட்டும் நெய்தல்நிலச் சிறப்பை விளக்குகிறது.(104-128)'நல்ல குறுந்தொகையில் நானிலம்' என்னும் தலைப்பில் இந்நூல் அமைந்திருந்தாலும் பாலையையும் சேர்த்து ஐவகை நிலங்களின் சிறப்பை வழங்குகிறது.தொல்காப்பியமரபையொட்டி இந்நூல் அமைந்துள்ளமை போற்றத்தக்கது




சிலம்பொலியாரின் 85-ஆம் பிறந்தநாள் விழாவில் என் படைப்பு

அவரது சொந்த ஊரான நாமக்கல் மாவட்ட சிவியம்பாளையத்தில் மணிமண்டபம் அமைக்கத் திட்டமிட்டபோது ரூ.ஐம்பது லட்சம் மதிப்புள்ள இடத்தை இலவசமாகக் கொடுத்திருக்கிறார் பூங்கோதை செல்லத்துரை என்ற பெண்.

சேரன் செங்குட்டுவன் கண்னகிக்குக் கோட்டம் அமைத்தார்.

அறிஞர் அண்ணா இளங்கோ அடிகளுக்குப் படிமம் அமைத்தார்.

கலைஞர் மு.கருணாநிதி பூம்புகார் நகர்க்காட்சியை மீட்டுருவாக்கினார்.

சிலம்பொலியார் புதல்வர் கொங்குவேள் சிலம்பொலியார்க்குத் திருவுருவச் சிலையும்"அறிவகம்" என்னும் அழகிய மணிமண்டபமும் அமைத்தார்.






ஊக்கமும் உணர்வும் ஊட்டும் நினைவுச் சின்னங்கள்;தமிழர் ஒவ்வொருவரும் பார்க்கவேண்டிய பண்பாட்டுப் பெட்டகங்கள்.

சிலம்பொலி
செல்லப்பனார்க்குப்
புகழ்வணக்கம்
6/4/2020 நினைவுநாள்
பள்ளியில் தொடங்கிப்
பாரெங்கும் முழங்கித்
திருக்குறள்நெறியைத்
திக்கெட்டும் பரப்பிய
சிலம்பொலிச் சான்றோர்
பிறந்தநாள்விழாவில்
பள்ளியில் குறளைப்
பாடமாய் ஆக்கிய
நீதியரசர் தலைமை
சிறப்பினும் சிறப்பு;
கல்வி அதிகாரியாய்
புகழ்மிகப் பெற்ற
சிலம்பொலியார் விழாவில்
கல்விவேந்தர் விருது
வழங்குவது
சாலவும் பெருமை;
சிலம்பொலிச் செம்மல்
கொல்லிமலைச் சாரலில்
தோன்றித் தமது
உழைப்பாலே
யாரும் எட்டிவிட முடியாத
புலமைச் சிகரங்களால்
எட்டுத் திசையும்
புகழ்மணம் பரப்பிய
தமிழ் இமயம்;
தமிழன்னையைக்
குழந்தையாய்க்
கொண்டாடிச்
சீராட்டிப் பாராட்டிய
தமிழ்த்தாயின் தந்தை!
நமது தமிழ்ப்பாட்டன்!
சங்க நூல்களின்
சால்பும் ஆழமும்
குறளின் மாண்பும்
சிலம்பின் சீர்னமயும்
மணிமேகலையின்
அணிமிகு நலனும்
சீறாப் புராணச்
செம்பொருள் நேர்த்தியும்
பிள்னளத் தமிழின்
பெற்றியும் உயர்வுறு
சிற்றிலக் கியங்களின்
சிறப்பும் சீர்த்தியும்
பாரதி பாரதிதாசன்
பரம்பரைப் பாவலர்
பாடல்திறமும்
வெல்லத் தமிழில்
உள்ளம் கொள்ளவே
பரப்புரை யாற்றிய
சொல்லேருழவர்
பறந்து சென்றார்
எமைத் துயரிலாழ்த்தியே!
புலவர் அனைவரும்
தலைவரை இழந்தனர்;
பைந்தமிழ்த் தேர்க்குப்
பாகனாய் விளங்கிய
செந்தமிழ்க் கொண்டல்;
தண்டமிழ்த் தென்றல்;
நூலறி புலவர்;
தமிழ்நெறிச் செல்வர்;
வள்ளுவம் போற்றிய
வாய்மை நெறியினர்;
சொல்லும் செயலும்
வேறு வேறின்றி
ஒன்றிய சிந்தை
என்றும் போற்றும்
உயர்ந்த பண்பும்
ஒப்பிலா நேர்னமயும்
அயர்விலா உனழப்பும்
அருங்குணச் செவ்வியும்
பகைநட் பாக்கொண்(டு)
ஒழுகும் பாங்கும்
தகவுடன் அமைவுறப்
பெற்ற நெஞ்சினர்;
அன்பும் அருளும்
குடிகொண்ட ஆலயம்;
கவிதை நூல்களின்
காப்புறு பதிவகம்;
தமிழில் விளங்கும்
அனைத்து நூல்களும்
தடையின்றி விளக்கிய
மனிதக் கணினி;
கருத்துச் செல்வம் வாரி
வழங்கிய வள்ளல்;
புலவரைப் போற்றிய
புரவலர்;
மாலை நேரத்தின்
மேடைப் பொழிவால்

நூலை ஆய்ந்திடும்
நெறியெமக் குணர்த்திய
நுண்மாண் நுழைபுலப்
பேரறிவின் உறைவிடம்
சிலம்பொலிச் செம்மலின்
புகழைச் சொல்ல
மீண்டும் இளங்கோ
வேண்டும் இங்கே!
ஆனால் அங்ஙனம்
பாடும் காப்பியம்
சிலம்பின் அதிகாரமாய்
அமையாது
சிலம்பொலி காட்டிய
அன்பின் விளக்கமாய்
உள்ளத் தூய்மையின்
இலக்கணமாய்
புலமைச் சாதனைகளின்
இலக்கியமாய்த் திகழும்.
புகழுருவாய் விளங்கும்
தமிழ்த்தந்தையைச்
சிந்தையில் கொண்டு
போற்றி வாழ்த்துகிறோம்.
தோன்றாத்துணையாய்
விளங்கும் **தொல்காப்பியன்**
அறப்பணி பலவும்
சிறப்புடன் ஆற்றும்
**கொங்குவேள்**
அவருக்குத் துணைநிற்கும்
சிலம்பொலி மருமகள்
மருத்துவமாமணி ஈசுவரி
தந்தையின் பணியைத்
தளராது தொடரும்
மணிமேகலை
கௌதமி
நகைமுத்து எனப்
பிள்ளைகள்
பெருமை பேசத்
தொடங்கினால்
மற்றொரு காப்பியம்
வரைந்திட வேண்டும்.
தந்தை புகழை மேம்படச்
செய்வதில் எவரும்
சளைத்தவர் அல்லர்;
கொங்குவேள்
மணிமேகலை
இருவருடனும்
**அன்பு மருகர் புட்பராசு**
சிலப்பதிகாரத் திருவிழா
சிறப்புடன் நிகழ்ந்திட
உழைத்து வருவதை
உரைத்திடல் வேண்டும்.
மேடை அமைப்பிலும்
திரைச்சேலைகள்
வரைவதிலும்
கொங்குவேள் காட்டும்
சிறந்த கலைவண்ணம்
காணக் கண்கோடி
வேண்டும்
போற்றிப் புகழ
ஆயிரம் நாக்கு வேண்டும்.
அருங்குணச் செம்மல்
கொங்குவேள்
பெருந்தகைமை சொல்ல
வார்த்தை இல்லை;
அப்பா மறைவின்பின்
அவர் புகழ்பரப்பும்
புகழ்வணக்க நிகழ்வில்
எல்லாம்
தளராது பங்கேற்று
ஊக்கம் நல்கிடும்
உயர்குணத்தைப்
போற்றிடவேண்டும்.
முத்துப்போல்
முதுமுனைவர் சிலம்பொலி
போற்றிய
தத்துப்பிள்ளைகள்
நாம் அனைவருமே!
உலக அரங்கில்
சிலம்பொலி முழங்க
விழைந்த
சிலம்பொலியார் கனவை
நனவாய் ஆக்குவோம்!

